ஸ்ரீமத் சங்கர பகவத்பாதர்கள்

அருளிய

# கனகதாரா ஸ்தோத்ரம்

(ஸ்ரீ மஹாலக்ஷ்மி அஷ்டோத்ர சத நாம ஸ்தோத்ரம்
நாமாவளியுடன்)




கிரி ப்ரஸ்

திருவல்லிக்கேணி : : சென்னை-5



ஸ்ரீமத் சங்கர பகவத்பாதர்கள் அருளிச்செய்த

# கனகதாரா ஸ்தோத்ரம்

(ஸ்ரீ மஹாலக்ஷ்மி அஷ்டோத்ர ஸதநாம ஸ்தோத்ரம்
நாமாவளியுடன்)

ப்ரஹ்மஸ்ரீ சாஸ்த்ர ரத்னாகரம்
தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரியள்
அவர்களால் எழுதப்பட்டது

கிரி ப்ரஸ்

பப்ளிஷர்ஸ் : : சென்னை - 5.

ஸ்ரீ ராமஜயம்
ஆனி மீ 3௨
ஆநந்த வருஷ



## பதிப்புரை

இவ்வுலகிலுள்ள சமஸ்தமான ஜனங்களையும் உய்விக்க எண்ணி, ஒவ்வொரு காலங்களில் ஒவ்வொரு காரண நிமித்தம், ஸ்ரீமத் ஜகத்குரு சங்கர பகவத் பாதாசார்யாள் அவர்களால் நமக்காகவே அனுக்ரஹிக்கப் பட்ட அநேக க்ரந்தங்களில் கனகதாரா ஸ்தோத்ரம் என்ற 18 ச்லோகங்களைக்கொண்ட இந்நூல் ஸ்ரீ மஹாலக்ஷ்மீ யைப்பற்றியதாகும்.

சகல விதமான ஜனங்களும் தாரித்ரிய நிலையிலிருந்து விடுபட்டு அகண்ட ஐச்வர்யத்தோடு கூடினவர்களாக ஆகி உத்கிருஷ்டமான நிலையை அடைய வேண்டும் என்ற உயர்ந்த எண்ணத்துடன் பகவத் பாதர்கள் அவர் களால் இந்நூல் இயற்றப்பட்டது.

ஸ்ரீ மஹா லக்ஷ்மீயின் ப்ரபாவத்தை விளக்கும் இந்த ச்லோகங்களை எந்த ஒரு மனிதன் தினமும் பாராயணம் செய்து ஸ்ரீ மஹா லக்ஷ்மீயை ஆராதித்து வருகிறானோ அந்த மனிதன் அஷ்டைச்வரிய ஸம்பன்னனாக ஆவான்; அந்த மனிதனுக்கு லக்ஷ்மீ கடாக்ஷம் பரிபூரணமாக ஏற்பட்டு, ஸர்வாபீஷ்டங்களும் ஸித்திக்கும் என்று தெரிகிறது.

ஆஸ்தீகத்திற்கு சோதனையும் சவாலும் ஏற்பட்டுள்ள இந்தக் காலத்தில் இந்நூலின் 7வது பதிப்பு வெளி வருவது குறித்து மிக்க மகிழ்ச்சி அடைகிறோம்.

இந்த ச்லோகங்களை பக்தி ச்ரத்தையுடன் படித்து, மஹா லக்ஷ்மீயை விதிவத்தாக பூஜை செய்ய வேண்டும் என்று விரும்பும் மக்களுக்கு அனுகூலமாக இருக்க வேண்டி இப்பதிப்பில், ஸ்ரீ மஹா லக்ஷ்மீ அஷ்டோத்ர ஸதநாம ஸ்தோத்திரமும், நாமாவளியும், சமஸ்கிருதம், தமிழ் லிபிகளில் சேர்க்கப்பட்டுள்ளது. இப்புத்தகத்தைப் படித்து மஹா லக்ஷ்மீயை பூஜை செய்து வரும் சகலமான ஜனங்களும், பரமோத் க்ருஷ்டமான நிலையை அடைய வேண்டும் என்று ப்ரார்த்தித்துக் கொள்கிறோம்.

இம்மாதிரியான பல அரிய நூல்களை எல்லோருக்கும் பயன்படக்கூடிய முறையில் ப்ரசுரிக்க வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்துடன், சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்பாக எங்கள் தகப்பனார் கைலாஸமய்யர் அவர்களால் எடுத்துக் கொள்ளப்பட்ட முயற்சியின் காரணமாக அவரால் வெளியிடப்பட்டுள்ள அநேக புஸ்தகங்களைப் போல், மேலும் பல அரிய புஸ்தகங்களை நாங்களும் தொடர்ந்துவெளியிட வேண்டும் என்று விரும்பும் எங்கள் எண்ணமும், விருப்பமும் ஆஸ்திக மஹா ஜனங்கள் எங்களுக்கு தொடர்ந்து அளிக்கக்கூடிய ஆதரவைப் பொருத்துத்தான் இருக்கிறது என்பதை பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

தங்கள்

K. கிருஷ்ணன்

17—1—1973

K. சாம்பசிவன்.

श्री:

# கனகதாரா ஸ்தோத்ர வரலாறு

शंकरं शंकराचार्यं लक्ष्मीं कनकवर्षिणीम् ।
ध्यायतो मे धनं बोधः सुलभो नास्ति मे भयम् ॥

சங்கரம் சங்கராசார்யம்
லக்ஷ்மீம் கநகவர்ஷிணீம்
த்யாயதோ மே தநம் போத:
ஸுலபோ நாஸ்தி மே பயம்

இந்த புண்ய பூமியில் ஸுகத்திற்கு ஹேதுவான ஸநாதன தர்மம் குறைந்து நிற்கும் காலங்களில், ஸர்வேச்வரனுன பகவானே அடிக்கடி மநுஷ்யவடிவாக அவதாரம் செய்கிறுர் என்பது

अजोऽपिसन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन्
प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया ।
यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥

அஜோபிஸ்ஸந்நவ்யயாத்மா பூதாநாமீச்வரோபிஸந்
ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா
யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத
அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம்

என்ற சாஸ்த்ரங்கள் மூலம் ப்ரஸித்தமானது. உண்மையில் ஸ்வயமாக பிறப்பற்ற பகவானும் ப்ராணிகளிடம் உள்ள கருணையால் பிறந்தார் போல் மாயையினுல் நடித்து விளையாடுகிருர். அப்படிச் செய்யும் பகவா

னுடைய அவதார லீலைகளில் ஆதிசங்கராசார்ய ஸ்வாமிகள் என்ற பெயரால் விளங்கும் மூர்த்தியும் ஒரு அபூர்வமான அவதாரமாகும். அந்த அவதாரம் பரமேஸ்வரனுடைய பூர்ண ஸ்வரூபம் என்றே சொல்லவேண்டும். அந்த அவதாரத்தில் தன்னுடைய பால்ய பருவத்திலேயே ஸந்யாசம் என்ற உத்தமமான ஆச்ரமத்தை ஸ்வீகரித்துக் கொண்டு லோக ஸஞ்சாரம் செய்தல் என்ற வ்யாஜத்தால், துர்மதங்களை கண்டித்து, வைதீக மதத்தை ஆங்காங்கு ஸ்தாபனம் செய்து ஸகல ப்ராணிகளும் அந்த ஸித்தாந்தத்தை அநுஷ்டித்து வரச்செய்தார். மனிதனால் செய்ய முடியாததான அபூர்வமான சில லீலைகள் செய்து, தான் மனிதனல்ல, பரமேஸ்வரன் என்பதையும், ஆங்காங்கு ஸூசிப்பித்திருக்கிறார்.

அவ்விதமான அமாநுஷ்யமான லீலைகளோ ஸ்ரீ சங்கரவிஜயத்தில் விரிவாக சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளுக்குள் தன்னுடைய ப்ரம்மசர்ய ஆச்ரமத்தில் தான் குருவினிடத்தில் வேதாத்யயனம் செய்யும் ஸந்தர்பத்தில் ஸ்ரீ சங்கராசார்யாள் தன்னுடன் சில ப்ரம்மசாரிகளையும் அழைத்துக்கொண்டு ஒரு ஸத்ப்ராம்மணனுடைய க்ருஹத்திற்கு பிக்ஷைக்குச் சென்றபொழுது ஏற்பட்ட லீலையாகும் இந்த கனகதாரா ஸதோத்ரம் என்ற நூல்.

கேரள தேசத்தில், பூர்ண நதீ தீரத்தில், காலடி என்ற க்ஷேத்ரத்தில் சிவகுரு என்ற மஹா ப்ராம்மணனுடைய தர்மபத்னியான ஆர்யாம்பாள் என்ற பதிவ்ரதா ஸ்திரீயினிடம் பரமசிவன் புத்ரனாக அவதரித்து ஸ்ரீ சங்கரர் என்ற பெயருடன் லோகமுழுதும் ப்ரஸித்தமாக விளங்கி வந்தார்.

தனக்கு ஐந்தாவது வயதில் உபநயனம் ஆனவுடன் தன்னைப்போலொத்த சில மாணக்கர்களோடு சேர்ந்து குருவினிடத்தில் வேதாத்யயனம் செய்துவந்தார். தன்

பிதாவினுல் ஸம்பாதிக்கப்பட்ட ஸகல பொருள்களேயும் பிதாவினுடைய யக்ஞத்திலேயே, ஸத்ப்ராம்மணர்களுக்கு விநியோகம் செய்துவிட்டு மிகவும் தாரித்ரிய அவஸ்தையில் தானிருப்பதுபோல் நடித்துக்கொண்டு, அப்பொழுதும் நிரம்பவும் வயதான தனது மாதாவை உபசரித்துக் கொண்டு அந்த அக்ரஹாரத்திலுள்ள க்ருஹங்களுக்கு ஒவ்வொரு தினமும் சென்று பிக்ஷாடனம் செய்து பிக்ஷையில் கிடைத்த அன்னத்தை தன் தாயை புஜிக்கும்படி செய்து விட்டு மீதியுள்ள அன்னத்தைத் தானும் புஜிக்கும் வழக்கமாக இருந்து வந்தது.

இவ்விதமான ஸந்தர்ப்பத்தில், ஒரு தினம் அந்த அக்ரஹாரத்திலுள்ள ஒரு மஹா ப்ராம்மணனுடைய க்ருஹத்திற்கு பிக்ஷைக்குப் போனுர். அந்த க்ரஹமோ தாரித்ரியத்தால் நிறைந்த க்ருஹம். ஸோமதேவர் என்ற அந்த ப்ராம்மணருடைய வித்யை நிரம்பவும் உயர்ந்தது. அவருடைய தர்மபத்னி தர்மசீலை என்னும் பெயருடையவள். அவர் ப்ரதிக்ருஹ வ்ருத்தியைக்கொண்டு ஜீவிக்கும் வழக்கமானதால் அன்றைய தினம் க்ராமாந்தரத்திற்கு ப்ரதிக்ருஹ வ்ருத்தியை அநுசரித்துப் போயிருந்தார். ஆசார்யாள் பிக்ஷைக்குப் போன சமயத்தில் அந்த க்ருஹத்தில் தர்மசீலை என்ற அம்மாள் மாத்ரமேஇருந்தாள். ஆசார்யாளோ தனது ஸ்நேகிதர்களுடன க்ருஹத்திற்குள் சென்று 'भवति भिक्षान् देहि' (பவதி பிக்ஷாந் தேஹி) என்ற மந்திரத்தை மூன்று ஆவர்த்தி உயர்ந்த ஸ்வரத்துடன் ஜபித்து அன்ன பிக்ஷையை யாசித்தார்— பதிவ்ரதாசிரோமணியான ஹே பரதேவதே! 'அன்ன பிக்ஷையை எனக்குக் கொடு' என்பது அந்த மந்திரத்தின் பொருளாகும். இந்த வார்த்தையைக் கேட்டு வீட்டிற்குள் இருந்த அம்மாளோ; 'யாரோ ப்ரம்மசாரி வீட்டிற்கு பிக்ஷைக்கு வந்திருக்கிருன்' என்று நினைத்து எதிரில் வந்து பார்க்கும்பொழுது ஆசார்யாளுடைய மூர்த்தியை தரிசித்து, 'ஸாக்ஷாத் பரமேஸ்வரனே நம்மைச் சோதிக்க

இந்த ரூபத்துடன் வந்திருக்கிறார்' என்று தீர்மானித்து ''சங்கரா உன்னைப்போலொத்த மஹா ப்ரும்மசாரிகளுக்கு பிக்ஷான்னம் கொடுக்கும்படியான பாக்யதை நான் செய்யவில்லை. என் பர்த்தா ஒவ்வொரு தினத்திலும் தனிகர்களிடம் சென்று ஏதாவது யாசித்து வருவார். பிறகு தான் அரிசி முதலான பதார்த்தங்களை வாங்கி புஜிப்பது வழக்கம். அதுபோல் இன்றும் ஸமீபத்திலுள்ள க்ராமங்களுக்குப் போயிருக்கிறார். அவர் வந்து தான் சமையல் ஆகவேண்டும். இந்த ஸமயத்தில் அன்னமும் இல்லை; நீயோ பிக்ஷைக்கு வந்திருக்கிறாய். நான் மஹா பாபியாக ஆகிவிட்டேன்'' என்று வருத்தத்துடன் கூறினாள்.

ஆசார்யாளோ அந்த அம்மாளை ஸமாதானம் செய்து விட்டு ''தாயே! உன்னுடைய வீட்டில் ஒன்றுமே இல்லையா? அன்னமில்லாவிட்டாலும் ஏதாவது உபவ்யஞ்சனாதிகள் (ஊறுகாய்கள்) இருந்தாலும் போதும். அதை பிக்ஷையாகக் கொடுத்தாலும் திருப்தி அடைவேன்'' என்று மறுபடியும் பிக்ஷையை யாசித்தார்.

भिक्षुं निष्कासयेन्नैव गृही श्रेय यदीच्छति ।
आपद्यपि विशुद्धस्सन् गृह्णीयात् पूजयेदमुम् ॥

பிக்ஷும் நிஷ்காஸயேந்நைவ க்ருஹீ ச்ரேய யதீச்சதி
ஆபத்யபி விசுத்தஸ்ஸந் க்ருஹ்ணீயாத் பூஜயேதமும்

தாயே! இந்த சாஸ்திரத்தை உன் பர்த்தா மூலம் நீ கேட்டிருக்கலாம் ''பிக்ஷைக்கு வந்த ப்ரம்மசாரியையோ, ஸந்யாஸியையோ இல்லை என்று சொல்லி போகச்சொல்லக் கூடாது. தன்னுடைய குடும்பத்தின் நன்மையை விரும்புகிற புருஷன் எவ்விதமான ஆபத்து காலத்திலும் யத்ருச்சையாக வந்த ப்ரும்மசாரியையும் ஸந்யாஸியையும் வரவேற்று பூஜிக்கவேண்டும்'' என்று சாஸ்திரங்கள்

சொல்லுகின்றன. உனக்கு அது தெரியாதா! உன்னுடைய பர்த்தா பெரிய வித்வான். ஆகையால் என்னைப் போலொத்த பிக்ஷுவை 'ஒன்றுமில்லை' என்று சொல்லி போகச் சொல்லக்கூடாது. ஏதாவது இருப்பதைக் கொண்டுவந்து பிக்ஷை அளிக்க வேண்டும் என்று வற்புறுத்தினர். வீட்டு அம்மாளோ நிரம்பவும் வருத்தத்துடன் வீட்டில் உண்மையில் நல்லதான பொருள் ஒன்றையும் காணுமல், சில நாட்களுக்கு முன்பு செய்து வைக்கப்பட்ட நெல்லிக்காய் ஊறுகாய் பாத்ரத்தைப் பார்த்தாள். அதற்குள் ஒரு நெல்லிக்காயும் இருந்தது. அதை எடுத்து பரம ஆதரவுடன் ஆசார்யாளிடம் பிக்ஷையாக அளித்து பூஜித்தாள். ஆசார்யாளுக்கோ பரம ஸந்தோஷ மேற்பட்டு விட்டது. வீட்டு அம்மாளைப் பார்த்து, "அம்மணீ! இந்த அபூர்வமான பதார்த்தம் இருக்கும்பொழுது 'ஒன்றுமில்லை' என்று எதற்காக நீ வருத்தப்பட்டாய்? ஞானிகளிக்கு ஏற்பட்ட ஆகாரமல்லவா இந்த பதார்த்தம்! அதிலும் என் தாயாருக்கு இதில் நிரம்பவும் ப்ரேமை உண்டு. நானும் எவ்வளவோ நாட்களாக இந்த கிராமத்தில் பிக்ஷை எடுக்கிறேன். இன்றுதான் கிடைக்கக்கூடாத பொருள் கிடைத்ததாக என் மனதில் ஸந்தோஷம் எழுந்திருக்கிறது. இந்த க்ருஹம் இனி பரமசுத்தமாக ஆகிவிட்டது. குபேர க்ருஹம் என்றே இதைச் சொல்லவேண்டும். நீங்கள் இனி 'பிக்ஷை எடுத்து ஜீவிப்பது' என்ற கஷ்டம் இந்த க்ஷணத்துடன் நிவ்ருத்தியாகிவிட்டது" என்று பரிபூர்ணமாக அநுக்ரஹம் செய்துவிட்டு, சற்று நேரம் அங்கேயே நின்று கொண்டு அஞ்சலிபந்தத்துடன், மஹாலக்ஷ்மீயினுடைய மூலமந்திரத்தை த்யானம் செய்துவிட்டு, இந்த கனகதாரா ஸ்தோத்திர சலோகங்களால் மஹாலக்ஷ்மீயை அந்த க்ருஹத்தில் பூர்ண கடாக்ஷம் ஏற்படும்படி ஆஹ்வானம் செய்தார். உடன் மஹாலக்ஷ்மீயும் பிரத்யக்ஷமாக அங்கு ஆவிர்பவித்தாள். ப்ரதக்ஷிண நமஸ்காராதிகளால், திருப்தியடைந்த மஹாலக்ஷ்மீயானவள் எதற்காக நான் இங்கு ஆஹ்வானம் செய்யப்பட்டேன்?" என்று கேட்ட

வுடன் ஸ்ரீ சங்கராசார்யாளும், "இந்த ப்ராமண க்ருஹத்தை உன் கடாக்ஷத்தால் குபேர க்ருஹமாகச் செய்ய வேண்டும்" என்று ப்ரார்த்தித்தார். இதைக்கேட்ட லக்ஷ்மீதேவி, "சங்கரா! இந்த வீட்டு யஜமானனும் அவரது பத்னியும் முன் ஜன்மாவில் குசேலர், சுசீலை என்று சொல்லப்பட்ட தம்பதிகளாக இருந்தவர்கள். கர்ம வசத்தால் முன் ஜன்மாக்களிலும் இவர்கள் தாரித்ரியாவஸ்தையை அடைந்தவர்கள். ஆனால் அந்த ப்ராம்மணனே மஹாஞானி. பிறகு ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய ப்ரஸாத விசேஷத்தால் தனிகர்களாக ஆனார்கள். தனத்தால் நிரம்பவும் செழிப்பாக இருக்கும் காலத்தில், தனமில்லாத காலத்திலிருந்த பக்தி விசேஷம் குறைந்து அஹங்காரத்தால் இஷ்டதேவதா நமஸ்காராதிகளைக்கூட விட்டுவிட்டு கேவலம் விஷய ஸுகபராளாக ஆகிவிட்டார்கள். இவர்களுக்கு தனத்தை அளித்த க்ருஷ்ணனே ஒருஸமயம் ப்ராம்மண வேஷதாரியாக மத்யான காலத்தில் போஜனத்திற்காக இவர்களுடைய க்ருஹத்திற்குச்சென்று யாசித்தார். இவர்கள் போஜனம் கொடுக்காமல் மறுத்து விட்டார்கள். அந்த பாபத்தால் மறுபடியும் தாரித்ரிய நிலைமையை அனுபவிக்கும்படி நேர்ந்து, இந்த ஜன்மாவிலும் இந்த அவஸ்தையை அடைந்திருக்கிறார்கள். இவ்விதமிருக்க இவர்களுடைய க்ருஹத்தை குபேர க்ருஹமாக செய்யவேண்டுமென்று என்னை அழைத்தாயே! நான் எவ்விதம் அப்படிச் செய்யமுடியும்" என்று கூற பகவானன சங்கரரும், ஹே தேவீ! நான் யார் என்று உனக்கு தெரியும். நான் ப்ரம்மசாரியாக பிக்ஷைக்கு வந்திருக்கிற காலத்தில் எனக்கு பிக்ஷை கொடுத்த பிற்பாடும் 'அவர்களிடம் பாபம் இருக்கிறது' என்று சொல்வது ந்யாயம் இல்லை. ஸன்யாஸிகளோ, ப்ரம்மசாரிகளோ யத்ருச்சையாக வந்த காலத்தில் அவர்களை கூப்பிட்டு அவர்களுக்கு ஏதாவது தானம்—உத்தரணி தீர்த்தம்—கொடுத்தாலும் மஹாமேருவை தானம் செய்ததற்கு ஸமானம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. வாமன அவதாரம் செய்த விஷ்ணுவினிடம் மஹாபலி சக்ரவர்த்தி தானம் செய்து

க்ருதார்த்தனுக ஆகவில்லையா? அதுபோல் எனக்கு பிக்ஷையை அளித்த இந்த தம்பதிகள் மஹா பரிசுத்தர்களாக ஆகிவிட்டார்கள். சங்கரனுக்கு பிக்ஷைகொடுத்த பிற்பாடு, பிக்ஷை கொடுத்தவர்களிடம் பாபலேசமே இராது. இவர்களுடைய பூர்வ வ்ருத்தாந்தம் எனக்கும் கொஞ்சம் தெரியும். ஸ்ரீக்ருஷ்ணபகவான் இவர்களுடைய க்ருஹத்தில் ப்ராம்மண வேஷதாரியாக போஜனம் செய்யப் போன தினமோ மஹாசிவராத்ரி வ்ரத தினமாகும். வ்ரத தினத்தில் அதிதி வந்தாலும் போஜனம் கொடுக்கக்கூடாது என்றுதான் சாஸ்த்ரம் சொல்லியிருக்கிறது. அந்த சாஸ்திரத்தை அனுசரித்துத்தான் இவர்கள் முன் ஜன்மாவில் போஜனமளிக்க மறுத்தார்கள். ஆகிலும் அன்று மஹா கைலாஸவாஸியான பரமசிவனுக்கு அதிகமான பஹுமானத்தைச செய்யவேண்டிய ஸந்தர்ப்பமான காரணத்தால் அந்த பரமசிவனே தன்னை பூஜிக்கவேண்டிய தினத்தில் அதிதிகளை ஸத்காரம் செய்யாத காரணத்தால் இந்த ஜன்மாவில் தாரித்ரியத்தை அனுபவிக்கும் இந்த தம்பதிகளை தானே ப்ரம்மசாரியாக வந்து இவர்களிடமிருந்து ஏதாவது யாசித்து அவர்களை தனிகர்களாகச் செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன் அவதரித்த பரம சிவனுக இருக்கக்கூடாதா நான்? உனக்கும் தேவ ரஹஸ்யத்தைச் சொல்லவேண்டுமா?'' என்று பரமாசார்யாள் சொன்னவுடன், லக்ஷ்மீதேவியும் ப்ரஸன்னமாகி தங்கமயமான பெரிய நெல்லிக்காய்களாகவே அந்த தம்பதிகளுடைய க்ருஹத்தைப் பூர்த்தி செய்து, அவர்களை எப்பொழுதும் லக்ஷ்மீ கடாக்ஷத்திற்குப் பூர்ண பாத்ரர்களாகச் செய்துவிட்டு ஆசார்யராலேயும் பூஜிக்கப்பட்டு ஆசார்யாளைப் பார்த்து 'உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்' என்று சொல்ல, ''நான் உன்னை ப்ரார்த்தித்து அழைத்த ச்லோகங்களை எவர்கள் தினந்தோறும் பாராயணம் செய்து உன்னை த்யானம் செய்கிறுர்களோ, அவர்களுடைய க்ருஹங்களில் நீ எப்பொழுதும் பரிபூர்ணமான ஸாந்நித்யத்தை அடைந்து விளங்கவேண்டும். அதுதான் எனக்கு ஏற்பட்ட வரமாகும்'' என்று ப்ரார்த்தித்தார்.

லக்ஷ்மீதேவியும் அவ்விதம் சம்மதித்துவிட்டு அந்தர்த்யானத்தை அடைந்தாள்.

இதனால் இந்த கனகதாரா ஸ்தோத்திரத்தை ப்ரதி தினம் எவர்கள் பாராயணம் செய்துகொண்டு லக்ஷ்மீ தேவியை த்யானம் செய்துவருகிறார்களோ அவர்களுடைய க்ருஹத்தில் லக்ஷ்மீதேவியானவள் வாஸம் செய்கிறாள் என்பது ஸித்தமாகிறது. தாரித்ரியத்தை அடியோடு ஒழிப்ப தற்கு ஒவ்வொரு க்ருஹத்திலும் இந்த கனகதாரா ஸ்தோத்ரம் என்ற புஸ்தகம் இருப்பது ஒரு சிந்தாமணி இருப்பதுபோலாகும். இந்த ஸ்தோத்ர பாராயணம் நடக்கும் க்ருஹத்தில் பொருளுக்குக் கொஞ்சமேனும் குறைவு வராது என்பது ஸித்தமாகும். இந்த ஸ்தோத்ரத்தைச் செய்த பரமாசார்யாளான சங்கரர் ஞானதாதாவான பரமேச்வரனாதலால் ஞான வ்ருத்தியும் ஏற்படும், இந்த ஸ்தோத்ரத்தை நாம் ப்ரதிதினம் பாராயணம் செய்துவருவதால் பரமசிவன் திருப்தி அடைந்து அந்த பரமசிவனே லக்ஷ்மீதேவியை அழைத்து நமது க்ருஹத்தில் ஸ்திரப் படுத்துகிறார் என்பது ஸித்திக்கிறது.

ஆகையால் ஒவ்வொரு குடும்பத்திலும் இந்த ஸ்தோத்ர புஸ்தகமானது ஒரு ரக்ஷையாக இருந்துவர வேண்டுமென்பது அவச்யமாகும்.

திருவல்லிக்கேணி
6—10—1943

ओम्

# கனகதாரா ஸ்தோத்ரம்

---

अङ्गं हरेः पुलकभूषणमाश्रयन्ती
भृङ्गाङ्गनेव मुकुलाभरणं तमालम् ।
अङ्गीकृताखिलविभूति रपाङ्गलीला
माङ्गल्यदाऽस्तु मम मङ्गलदेवतायाः ॥ १ ॥

அங்கம்ஹரே: புளகபூஷணம் ஆஶ்ரயந்தீ
ப்ருங்காங்கநேவ முகுளாபரணம் தமாலம்
அங்கீக்ருதாகில விபூதி: அபாங்கலீலா
மாங்கள்யதாஸ்து மம மங்களதேவதாயா: 1

*பதவுரை :*

**मुकुलाभरणं** - *முகுளாபரணம்* = மொட்டுகளால் அலங்கரிக்கப்பட்ட **तमालं**-*தமாலம்* = தமாலவ்ருக்ஷத்தை **भृङ्गाङ्गनेव** - *ப்ருங்காங்கநேவ* = பொன்வண்டுபோல் **पुलकभूषणं**-*புளகபூஷணம்* = மொட்டுக்குச் சமானமான மயிர்க்கூச்சலால் அலங்கரிக்கப்பட்ட **हरेः** - *ஹரே:* = மஹாவிஷ்ணுவினுடைய **अङ्गम्** - *அங்கம்* = சரீரத்தை **आश्रयन्ती** - *ஆச்ரயந்தீ* = ஆச்ரயித்ததாயும் **अङ्गीकृताखिल विभूतिः** - *அங்கீக்ருதாகில விபூதி:* = ஸமஸ்தமான ஐச்வர்யங்களால் நிரப்பப்பட்டதாயும் உள்ள **मङ्गलदेवतायाः** - *மங்களதேவதாயா:* = மஹாலக்ஷ்மியினுடைய

अपाङ्गलीला-அபாங்கலீலா = கடைக்கண் பார்வையின் விலாஸமானது मम - மம = எனக்கு माङ्गल्यदा - மாங்கள்யதா = ஸெளபாக்யத்தைக் கொடுக்கிறதாக अस्तु - அஸ்து = ஆகட்டும்

தாத்பர்யம் :

மஹாவிஷ்ணுவினுடைய சரீரமானது நீலமேக ச்யாமளம் அதாவது மேகம்போல் கருத்திருக்கும். ஆனல் லக்ஷ்மீதேவியை தான் பரிணயம் செய்துகொண்ட பாக்யத்தை நினைத்து நினைத்து ரோமாஞ்சங்கள் சரீரத்தில் உண்டாயிருக்கின்றன. அந்த ரோமாஞ்சங்கள் ஒவ்வொன்றும், சின்ன புஷ்பத்தின் மொட்டுகள் மாதிரியாகத் தோன்றுகின்றன. அதை எப்பொழுதும் மஹாலக்ஷ்மீ கடைக்கண்ணுல் பார்த்துக் கொண்டே இருக்கிருள். அந்த லக்ஷ்மீதேவியினுடைய கடைக்கண் பார்வையாகிய லீலை மஹாவிஷ்ணுவினுடைய சரீரத்திலேயே எப்பொழுதும் விகசித்தி வருவதைப் பார்த்தால், தமால வ்ருக்ஷமென்ற வ்ருக்ஷ விசேஷமானது மொட்டுகளால் அலங்கரிக்கப்பட்டு, அந்த புஷ்ப மொட்டுகளிலுள்ள ரஸத்தை எடுத்துக் கொண்டுபோக பொன் வண்டுகள் அதை ஆச்ரயித்தால், அது எப்படி இருக்குமோ அது போல் தோன்றுகிறது. லக்ஷ்மீயினுடைய அபாங்க லீலைக்கு ப்ருங்காங்கனையை உதாரணமாகச் சொன்னதினுல் ப்ருங்காங்கனைக்கு புஷ்பங்களிலுள்ள ஸாரமான ரஸம்தான் தென்படுவதுபோல், அம்பாளுடைய கடாக்ஷத்திற்கும், பக்தகோடிகளினுடைய குணந்தான் தென்படுமேயொழிய தோஷங்களை தேவி கவனிக்கமாட்டாள் என்பது தெரிகிறது. தமால வருக்ஷத்தை மஹாவிஷ்ணுவிற்கு உதாரணமாகச் சொல்லியிருப்பதைப் பார்க்க வ்ருக்ஷங்கள் எவ்விதம் தனது சாயையினுல், வெய்யிலில் தபிக்கப்பட்ட ஜனங்களுக்கு ஸுகத்தை கொடுக்குமோ, அதுபோல் மஹாவிஷ்ணுவும் ஆத்யாத்மிகம், ஆதி

பௌதிகம், ஆதிதெய்விகம் என்ற மூன்றுவிதமான தாபங்களால் தபிக்கப்பட்ட ஜீவகோடிகளுக்கு தாபத்தை நிவர்த்தி செய்து சுகத்தைக் கொடுக்கும் ஸ்வபாவமுள்ளவர் என்பதும் வெளியாகிறது. விஷ்ணுவினுடைய ரோமாஞ்சங்களுக்கு புஷ்ப மொட்டுகளை த்ருஷ்டாந்தமாகச் சொல்லி இருப்பதனுல் மொட்டுகள் விரிந்து (மலர்ந்து) பூஜார்கமாக ஆவதுபோல் விஷ்ணுவினுடைய ரோமாஞ்சங்களும் பூஜார்ஹம் என்று தெரிகிறது. அவ்விதமான விஷ்ணுவினுடைய சரீரத்தை ஆச்ரயித்து மங்கள தேவதை என்ற மஹாலக்ஷ்மீயினுடைய கடைக்கண் பார்வைக்கே ஸமஸ்தமான விபூதியையும், ஐச்வர்யங்களையும் கொடுக்கும் வல்லமை இருப்பதினுல் அந்த லக்ஷ்மீ கடாக்ஷமானது எனக்கு எல்லாவிதமான சௌபாக்யத்தையும் கொடுக்கட்டும் என்று ப்ரார்த்திக்கப்படுகிறது. லக்ஷ்மீ கடாக்ஷத்திற்கு இந்த கனகதாரா ஸ்தோத்ரமே முக்யமான உபாயமாகும். அதிலும் இந்த முதல் ச்லோகமானது அந்தரங்கமான உபாயமாகும் என்ற இதன் தாத்பர்யம் வெளியாகிறது.

---

मुग्धा मुहुर्विदधती वदने मुरारेः
प्रेमत्रपाप्रणिहितानि गतागतानि।
माला दृशोर्मधुकरीव महोत्पले या
सा मे श्रियं दिशतु सागरसंभवायाः ॥ २ ॥

முக்தா முஹுர்விதததீ வதனே முராரே:
ப்ரேமத்ர பாப்ரணிஹிதானி கதாகதானி
மாலா த்ருசோ: மதுகரீ வ மஹோத்பலே யா
ஸா மே ச்ரியம் திசது ஸாகரஸம்பவாயா: 2

பதவுரை :

महोत्पले - மஹோத்பலே = நீலோத்பல புஷ்பத்தில் मधुकरी इव - மதுகரீ இவ = வண்டுபோல் मुरारेः = முராரே: = மஹாவிஷ்ணுவினுடைய वदने - வதநே = முகத்தில் प्रेमत्रपाप्रणिहितानि - ப்ரேமத்ரபாப்ரணிஹிதாநி = ப்ரேமை, லஜ்ஜை இந்த இரண்டுகளாலும் ஏற்பட்ட गतागतानि - கதாகதாநி = கமனுகமனங்களை (தர்சனு தர்சனங்களை) அதாவது கொஞ்சநேரம் பகவானைப் பார்க்கிறது பிறகு கொஞ்சநேரம் பகவானைப் பார்க்காம லிருக்கிறது என்பதை मुहुः - முஹு: = அடிக்கடி विदधती - விதததீ = செய்கிறதாயும், मुग्धा - முக்தா = மந்தஹாஸத்துடன் அழகாகவுமிருக்கிற सागरसम्भवायाः - ஸாகரஸம்பவாயா: = மஹாலக்ஷ்மீயினுடைய या - யா = யாதொரு दृशोः माला - த்ருசோ: மாலா = இரண்டு கண் த்ருஷ்டிகளுடைய வரிசையுண்டோ सा - ஸா = அந்த த்ருஷ்டி வரிசையானது मे - மே = எனக்கு श्रियं ச்ரியம் = ஸம்பத்தை दिशतु - திசது = கொடுக்கட்டும்.

தாத்பர்யம் :

பெரியதாயும் நல்ல வாஸனையுள்ளதாயும் உள்ள நீலோத்பல புஷ்பத்தின் ரஸத்தை க்ரஹிப்பதற்காக வண்டுகளின் வரிசையானது அந்த புஷ்பங்களில் வந்து உட்காருவதாகவும், போகிறதாகவும், எப்படிக் காணப்படுமோ, அதுபோல் பாற்கடலில் உத்பவித்த மஹா லக்ஷ்மீயானவள், நீலமேகச்யாமள வர்ணமுள்ள தனது பர்த்தாவான மஹாவிஷ்ணுவினுடைய முகமாகிய நீலோத்பல புஷ்பத்தில், தன்னுடைய இரண்டு த்ருஷ்டிகளையும் பரமப்ரேமையினுல் செலுத்துகிறவளாயும், பிறகு லஜ்ஜை

யினுல் அந்த த்ருஷ்டிகளேயே திருப்பிக் கொள்ளு கிறவளாயும் இருந்துகொண்டு, மந்தஹாஸத்துடன் விளங்கிவருகிருள். அதாவது ப்ரேமையோடு ஸ்ரீ மஹா லக்ஷ்மீ தேவியானவள் மஹாவிஷ்ணுவினுடைய முகத் தைப் பார்க்கிறதும், பிறகு லஜ்ஜையினுல் பார்க்காமலிருப் பதுபோலும், தன்னுடைய த்ருஷ்டி விலாஸங்களேச் செய்து கொண்டு விளங்குகிருள். அவ்விதமுள்ள மஹா லக்ஷ்மீயினுடைய கடாக்ஷ வீக்ஷணமானது அகண்ட மான ஐச்வர்யத்தை எனக்கு கொடுக்கவேண்டும் என்று அர்த்தத்தை அநுஸந்தானம் செய்து கொண்டு இந்த ச்லோகத்தை பாராயணம் செய்ய வேண்டும்.

---

विश्वामरेन्द्रपदविभ्रमदानदक्षं
आनन्दहेतुरधिकं मुरविद्विषोऽपि ।
ईषन्निषीदतु मयि क्षणमीक्षणार्धं
इन्दीवरोदरसहोदरमिन्दिरायाः ॥ ३ ॥

விச்வாமரேந்த்ரபத விப்ரமதாநதக்ஷம்
ஆனந்தஹேதுரதிகம் முரவித்விஷோபி
ஈஷந்நிஷீதது மயி க்ஷணம் ஈக்ஷணர்தம்
இந்தீ வரோதரஸஹோதரம் இந்திராயா: 3

*பதவுரை :*

विश्वामरेन्द्रपदविभ्रमदानदक्षं - *விச்வாமரேந்த்ரபதவி ப்ரமதாநதக்ஷம்* = தேவேந்திரனுடைய ஸ்தானமாகிற ஸ்வர்கத்தில் அடையக்கூடிய ஸமஸ்தவிதமான விலாஸங் களேயும் (போக ஸுகத்தை) இந்த லோகத்திலேயே பக்தர் களுக்கு கொடுக்கிற ஸாமர்த்யமுள்ளதாயும் **मुरविद्विषोपि** -

முரவித்விஷோபி - மஹாவிஷ்ணுவுக்குக்கூட अधिकं (यथातथा) - அதிகம் (யதா ததா) = அளவிடமுடியாம லிருக்கக்கூடிய आनन्दहेतुः - ஆனந்தஹேது: = ஸுகத் தைக் கொடுப்பதற்குக் காரணமாயும் इन्दीवरोदरसहोदरं இந்தீவரோ தரஸஹோ தரம் = நீலோத்பல புஷ்பத்தி னுடைய மத்ய பாகத்திற்கு ஸமானமாயும் இருக்கிற इन्दिरायाः - இந்திராயா: = மஹாலக்ஷ்மீயினுடைய इषत् - ஈஷத் = ஸ்வல்பமான ईक्षणार्ध-ஈக்ஷணார்தம் = கடைக்கண்ணின் பாதிப்பார்வையானது मयि - மயி = என்னிடத்தில் क्षणं - க்ஷணம் = ஒரு க்ஷணம் மட்டும் निषीदतु - நிஷீதது = இருக்கட்டும்.

தாத்பர்யம் :

மஹாலக்ஷ்மீயினுடைய கடைக்கண்ணின் பாதிப் பார்வையே ஒரே க்ஷணமாவது ஒருவனுக்கு ஏற்பட்டால் அந்த மனிதன் பெரிய ஸார்வபௌமனுக (அகண்ட ஐச்வர்யத்தோடு கூடினவனுக) ஆகிவிடலாம். ஸ்வர்க்க லோகத்திலுள்ள ஸமஸ்தமான ஸுகங்களையும் இந்த லோகத்திலேயே தனது பக்தனுக்கு மஹாலக்ஷ்மீயி னுடைய கடாக்ஷ வீக்ஷணமானது கொடுக்கும் வல்லமை யுள்ளது. மஹாவிஷ்ணுவும் லக்ஷ்மீகடாக்ஷம் தன்மீது விழுந்தாற்தான் அபரிச்சின்னமான ஆனந்தத்தை அனுப விக்கக்கூடியதான பாக்யத்தை அடைந்துவருகிருர். லக்ஷ்மீதேவியினுடைய கடாக்ஷவீக்ஷணமே நீலோத்பல புஷ்பத்தினுடைய மத்ய பாகத்திற்கு ஸமானமானது. நீலோத்பல புஷ்பத்தை லக்ஷ்மீதேவியினுடைய கடாக்ஷ வீக்ஷணத்திற்கு உபமானமாகச் சொன்னதிலிருந்து புஷ்பங்களுக்குள் நீலோத்பல புஷ்பமே சிறந்ததாக ஆகும். அவ்விதமான புஷ்பங்களால் பூஜை செய்வதற்கு அகண்ட ஸச்சிதானந்த ரூபமான பரப்ரம்மமே பாத்ர

மாகும். மஹாலக்ஷ்மீ தேவியினுடைய கடாக்ஷ வீக்ஷணம் எந்த மனிதனிடத்தில் ஏற்படுகிறதோ, அந்த மனிதன் நீலோத்பல புஷ்பத்தால் பூஜிக்கத்தகுந்த பரப்ரம்மத்தினுடைய பாவத்தை அடைந்து ஈச்வரனாகவே தானாகி விடுகிறான் என்று அறிய வேண்டும். ஆகையால் மஹாலக்ஷ்மீதேவியினுடைய கடாக்ஷத்தை அடைய எல்லோரும் கனகதாரா ஸ்தோத்ரத்தை பாராயணம் செய்ய வேண்டியது அவச்யம்.

---

आमीलिताक्षमधिगम्य मुदा मुकुन्दं
आनन्दकन्दमनिमेषमनङ्गतन्त्रम् ।
आकेकरस्थितकनीनिकपक्ष्मनेत्रं
भूत्यै भवेन्मम भुजङ्गशयाङ्गनायाः ॥ ४ ॥

ஆமீலிதாக்ஷமதிகம்ய முதா முகுந்தம்
ஆநந்தகந்தம் அநிமேஷம் அநங்க தந்த்ரம்
ஆகேகரஸ்திதகநீநிகபக்ஷ்மநேத்ரம்
பூத்யை பவேந்மம புஜங்கசயாங்கநாயா: 4

பதவுரை :

मुदा - முதா = ஸந்தோஷத்தால் आमीलिताक्षं - ஆமீலிதாக்ஷம் = கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருக்கிற मुकुन्दं - முகுந்தம் = தனது பர்த்தாவான மஹா விஷ்ணுவை अधिगम्य - அதிகம்ய = பார்த்துவிட்டு आनन्दकन्दं - ஆனந்தகந்தம் = ஆனந்தத்தை கொடுக்கிறதாயும் अनिमेषं - அநிமேஷம் = இமைக் கொட்டலில்லாததாயும் अनङ्गतन्त्र - அநங்கதந்த்ரம் =

காமோத்வேகத்தை உண்டுபண்ணுகிறதாயும் உள்ள **भुजङ्गशयाङ्गनायाः**-*புஜங்கசயாங்கனாயா:*—மஹாலக்ஷ்மியி னுடைய **आकेकरस्थितकनीनिकपक्ष्मनेत्रं** - *ஆகேகரஸ்திதக நீனிகபக்ஷ்மநேத்ரம்* = பாதி மூடிய நிலையிலுள்ள கருவிழி களோடும் இமைகளோடும் கூடின நேத்ரமானது **मम** - *மம* = எனக்கு **भूत्यै** - *பூத்யை:* = ஐச்வர்யத்தின் பொருட்டு **भवेत्** - *பவேத்* = இருக்கட்டும் (ஐச்வர்யங்களைக் கொடுக்கட்டும்).

*தாத்பர்யம் :*

ஸாக்ஷாத் மஹாவிஷ்ணுவானவர் தனது புண்ய பரிபாகத்தால் அதிஸுந்தரியான இந்த மஹாலக்ஷ்மியை தாம் பார்யையாக அடைந்தோம் என்ற ஸந்தோஷத்தால், தன் கண்களினால் இமைக்கொட்டாமலே எப்பொழுதும் மஹாலக்ஷ்மீயைப் பார்த்துக்கொண்டே இருக்கிறார். மஹா லக்ஷ்மீயும் தன்னிடத்தில் மஹாவிஷ்ணு நிரம்ப மயக் கத்தை அடைந்திருக்கிறார் என்பதை அறிந்து தன் கண் களினாலும் மஹாவிஷ்ணுவையே இமைக்கொட்டாமலே பார்த்து வருகிறாள். அந்தக் கண் பார்வையானது மஹா விஷ்ணுவிற்கு ஒரே பேரானந்தத்தையும் காமவிகாரத்தை யும் உண்டுபண்ணுகிறதாக இருந்துவருகிறது. அந்த மஹாலக்ஷ்மீயினுடைய கண்களோ, தீர்க்கமாக நீண்டு கருவிழிகளாலும், இமைகளினாலும் அலங்கரிக்கப்பட்டவை களாக இருக்கின்றன. இவ்விதம் மஹா லக்ஷ்மீ கடாக்ஷ மானது தனக்கு ஸகலவிதமான ஐச்வர்யத்தையும் கொடு க்கவேண்டும் என்ற எண்ணத்துடன் இந்த ச்லோகத்தை பாராயணம் செய்பவர்களுக்கு மஹா லக்ஷ்மீயின் பூர்ண கடாக்ஷம் ஏற்பட்டு ஸகலவிதமான ஐச்வர்யமும் ஏற்படும் என்பது திண்ணம்.

---

बाह्वन्तरे मधुजितः श्रितकौस्तुभे या
हारावलीव हरिनीलमयी विभाति ।
कामप्रदा भगवतोऽपि कटाक्षमाला
कल्याणमावहतु मे कमलालयायाः ॥ ५ ॥

பாஹ்வந்தரே மதுஜித: ச்ரிதகௌஸ்துபே யா
ஹாராவலீவ ஹரிநீலமயீ விபாதி
காமப்ரதா பகவதோபி கடாக்ஷமாலா
கல்யாணம் ஆவஹது மே கமலாலயாயா: 5

*பதவுரை :*

मधुजितः - *மதுஜித :* = *மஹாவிஷ்ணுவினுடைய* बाह्वन्तरे - *பாஹ்வந்தரே* = *மார்பில்* श्रितकौस्तुभे - *ச்ரித கௌஸ்துபே* = *விளங்குகின்ற* கௌஸ்துபமணியில் हरिनीलमयी - *ஹரிநீலமயீ* = இந்த்ர நீலமணிமயமான हारावलीव - *ஹாராவலீவ* = *மாலையின்* வரிசைபோல் कमलालयायाः-*கமலாலயாயா:* = லக்ஷ்மீதேவியினுடைய भगवतोपि - *பகவதோபி* = விஷ்ணுவுக்குக்கூட कामप्रदा- *காமப்ரதா* = அபீஷ்டத்தைக் கொடுக்கிற या - *யா* = யாதொரு कटाक्षमाला - *கடாக்ஷமாலா* = கடைக்கண் வரிசையின் பார்வையானது विभाति - *விபாதி* = விளங்குகிறதோ **सा** - *ஸா* = அந்த லக்ஷ்மீதேவியினுடைய கடைக்கண் பார்வை **मे** - மே = எனக்கு **कल्याण**- *கல்யாணம்* = மங்களத்தை **आवहतु** - **ஆவஹது** = கொடுக்கட்டும்.

**தாத்பர்யம் :**

மஹாவிஷ்ணுவானவர் தன் மார்பில் கௌஸ்துப மணியை தரித்துவருகிறுர். அதை அடிக்கடி மஹாலக்ஷ்மீயானவள் தன் கடைக்கண்ணுல் பார்த்துவரும் பொழுது. அந்த கௌஸ்துபமணியின்பேரில், இந்த்ர நீலமணியினுல் ஒரு ஹாரம் போடப்பட்டிருக்கிறதோ என்று தோன்றுகிறது. மஹாலக்ஷ்மீயானவள் உத்தம ஸ்த்ரீயான காரணத்தினுல், அவளுடைய கடைக்கண்கள் அதிக கருமை நிறமுள்ளதாக இருக்கின்றன. அதனுல் அவைகளுடைய பார்வையை இந்த்ர நீலமணிபோல் வர்ணித்தது உசிதமாகும். அத்துடன் லக்ஷ்மீ தேவியினுடைய கடாக்ஷவீக்ஷண்யம் தான் விஷ்ணுவுக்குக்கூட ஸகல அபீஷ்டங்களையும் கொடுக்கக்கூடியதாக இருந்து வருகிறது. அவ்விதம் மஹிமையுள்ள லக்ஷ்மீகடாக்ஷமானது, எனக்கு மங்களத்தையே கொடுக்கவேண்டும்.

---

कालांबुदालिललितोरसि कैटभारेः
धाराधरे स्फुरति या तटिदङ्गनेव ।
मातुः समस्तजगतां महनीयमूर्तिः
भद्राणि मे दिशतु भार्गवनन्दनायाः ॥ ६ ॥

காலாம்புதாலி லலிதோரஸி கைடபாரே:
தாராதரே ஸ்புரதி யா தடிதங்கநேவ
மாது: ஸமஸ்தஜகதாம் மஹநீயமூர்த்தி:
பத்ராணி மே திசது பார்க்கவநந்தநாயா: 6

பதவுரை :

**कैटभारेः** - கைடபாரே: = விஷ்ணுவினுடைய **कालांबुदालिललितोरसि** - காலாம்புதாலிலலிதோரஸி = நீருண்ட மேகப்படலம்போல் அழகாயுள்ள மார்பில் **धाराधरे** - தாராதரே = மேகத்தில் **तटिदङ्गनेव** - தடிதங்கநேவ = மின்னலாகிற ஸ்த்ரீபோல் **भार्गवनन्दनायाः** - பார்கவநந்தநாயா: = ப்ருகுவம்சத்தில் அவதரித்தவளாயும் **समस्तजगतां मातुः** - ஸமஸ்தஜகதாம் மாது: = ஸகல லோகத்திற்கும் மாதாவாயுமுள்ள மஹாலக்ஷ்மீயினுடைய **या** - யா = யாதொரு **महनीयमूर्तिः** - மஹனீயமூர்த்தி: = பூஜிக்கத்தகுந்த ஆக்ருதியானது **स्फुरति** - ஸ்புரதி = ப்ரகாசிக்கிறதோ **सा** - ஸா = அந்த மூர்த்தியானது **मे** - மே = எனக்கு **भद्राणि** - பத்ராணி = மங்களங்களை **दिशतु** - திசது = உண்டுபண்ணட்டும்.

தாத்பர்யம் :

நீருண்ட மேகத்தினுடைய மத்தியில் அழகான மின்னல் கொடிபோல் மஹாலக்ஷ்மீ தேவியினுடைய அழகான ஆக்ருதியானது, மஹாவிஷ்ணுவினுடைய மார்பில், மஹாலக்ஷ்மீ மஹாவிஷ்ணுவை ஆலிங்கனம் செய்துகொள்ளும் காலத்தில் விளங்கி வருகிறது. அவ்விதமான ஆக்ருதையுடைய மஹாலக்ஷ்மீ தேவியோ, ப்ருகு மஹர்ஷியினுடைய வம்சத்தில் அவதரித்தவள். ஸகல லோகத்திற்கும் தாயாராகவும் விளங்கி வருகிறவள். அவ்விதமாயுள்ள மஹாலக்ஷ்மீ தேவியின் அழகான ஆக்ருதியை யாரால் வர்ணிக்க முடியும்? அவ்விதமான மூர்த்தியானது எனக்கு மங்களங்களைக் கொடுத்து வர வேண்டும்.

---

प्राप्तं पदं प्रथमतः खलु यत्प्रभावात्
मांगल्य भाजि मधुमाथिनि मन्मथेन ।
मय्यापतेत्तदिह मन्थरमीक्षणार्धं
मन्दालसं च मकरालयकन्यकायाः ॥ ७ ॥

ப்ராப்தம் பதம் ப்ரதமத: கலு யத்ப்ரபாவாத்
மாங்கல்யபாஜி மதுமாதினி மன்மதேன
மய்யாபதேத்ததிஹ மந்தரம் ஈக்ஷணர்தம்
மந்தாலஸம் ச மகராலயகந்யகாயா: 7

*பதவுரை :*

मांगल्यभाजि - *மாங்கல்யபாஜி* = ஸர்வமங்களத்திற்கும் இருப்பிடமாயும் मधुमाथिनि - *மதுமாதினி* = மது என்ற அஸுரனைக் கொன்றவராயுமுள்ள மஹா விஷ்ணுவினிடத்தில் मन्मथेन - *மன்மதேன* = மன்மதனுலே यत्प्रभावात् - *யத்ப்ரபாவாத்* = எந்த லக்ஷ்மீதேவியினுடைய கடாக்ஷ ப்ரபாவத்தால் प्रथमतः - *ப்ரதமத:* = முதலில் पदं - *பதம்* = தனக்கு வாசஸ்தானமானது प्राप्तंखलु - *ப்ராப்தம்கலு* = நிச்சயமாக அடையப்பட்டதோ मकरालय कन्यकायाः - *மகராலய கந்யகாயா:* = லக்ஷ்மீதேவியினுடைய मन्दालसं - *மந்தாலஸம்* = மெதுவாக தளர்ந்ததாயும் मन्थरं - *மந்தரம்* = வ்யாமோஹத்தை உண்டுபண்ணுகிறதாயுமிருக்கிற तत् - *தத்* = அந்த ईक्षणार्धं - *ஈக்ஷணர்தம்* = அரைக்கண் பார்வையானது इह - *இஹ* = இப்பொழுது मयिच - *மயிச* = என்னிடத்திலும் आपतेत् - *ஆபதேத்* = விழட்டும்.

தாத்பர்யம் :

மன்மதனுனவன் லோகத்தை ஜயிப்பதில் ப்ரஸித்தி பெற்றவன். அதிலும் முதன்மையான மஹா விஷ்ணுவை ஜயிப்பதில், விஷ்ணுவினிடத்தில் ஏற்பட்ட மஹாலக்ஷ்மீ தேவியினுடைய கடாக்ஷம்தான் அவனுக்கு உதவியாக இருந்தது. அந்த கடாக்ஷத்தின் சலனமோ, ஸௌந்தர்யமோ, இவ்விதம்தான் என்று வர்ணிக்கமுடியாததான மஹிமை உடையது. அவ்விதமான லக்ஷ்மீகடாக்ஷமானது, என்னிடத்திலும் வீசி, என்னை ஸௌபாக்யத்தோடு கூடினவனுகச் செய்ய வேண்டும்.

---

दद्याद्दयानुपवनो द्रविणाम्बुधारां
अस्मिन्नकिंचनविहङ्गशिशौ विषण्णे ।
दुष्कर्मघर्ममपनीय चिराय दूरं
नारायणप्रणयिनीनयनाम्बुवाहः ॥ ८ ॥

தத்யாத்தயானுபவனே த்ரவிணும்புதாராம்
அஸ்மின்னகிஞ்சன விஹம்கசிசௌ விஷண்ணே
துஷ்கர்மகர்மமபநீய சிராய தூரம்
நாராயண ப்ரணயினீ நயனும்புவாஹ: 8

பதவுரை :

दयानुपवनः - தயானுபவன:= கருணையை அனுகூலமான காற்றுக உடைத்தான **नारायण प्रणयिनी नयनां बुवाहः** - நாராயண ப்ரணயிநீ நயனும் புவாஹ: = ஸ்ரீதேவியான மஹாலக்ஷ்மீயினுடைய கடாக்ஷமாகிய மேகமானது

**अस्मिन्** - *அஸ்மின்* = இந்த **विषण्णे** - *விஷண்ணே* = கஷ்டப்படுகிற **अकिंचन विहङ्गशिशौ** - *அகிஞ்சன விஹங்கசிசௌ* = தரித்திரனுகிற சிறு சாதக பக்ஷியினுடைய விஷயத்தில் **दुष्कर्मघर्मं** - *துஷ்கர்ம கர்மம்* = பாபமாகிற அத்யுஷ்ண தாபத்தை **चिरायदूरं** - *சிராய தூரம்* = வெகுதூரத்திற்கப்பால் **अपनीय** - *அபநீய* = போக்கடித்துவிட்டு **द्रविणांबुधारां** - *த்ரவிணாம்புதாராம்* = பணமாகிற ஜலப்ரவாஹத்தை **दद्यात्** - *தத்யாத்* = கொடுக்கட்டும் (வர்ஷிக்கட்டும்).

*தாத்பர்யம் :*

மஹாலக்ஷ்மீயினுடைய நயன ஸௌந்தர்யமானது கருவிழி விலாஸத்தால் நீருண்ட மேகம்போல் விளங்கி வருகிறது. அவ்விதம் மேகத்திற்கு ஸமானமான லக்ஷ்மீ தேவியினுடைய நயனத்திற்கு, லக்ஷ்மீதேவிக்கு பக்த கோடிகளிடத்திலிருக்கும் கருணையே, அனுகூலமான காற்றும், ஆகின்றது. மேகத்திற்கு புரோவாதம் (கீழ் காற்று) அனுகூலமான காற்றென்றும், அந்த புரோவாதத்துடன் கூடின மேகமானது, பூர்ணமாக வர்ஷிக்குமென்பதும் லோகப்ரஸித்தமானது. கருணையாகிய புரோவாதத்துடன் கூடின லக்ஷ்மீ தேவியினுடைய நயனமாகிற மேகமோ தாரித்ரியத்திற்கு காரணமான பாப கர்மாவாகிய க்ரீஷ்மரிதுவின் தாபத்தை வெகு தூரத்திற்கப்பால் துரத்திவிட்டு, தனமாகிய வர்ஷத்தை பரிபூர்ணமாக பக்தகோடிகளுக்கு கொடுக்கின்றது. லோகத்திலுள்ள மேகமோ ஜலத்தை வர்ஷிக்கும். அம்பிகையினுடைய நயனமாகிற மேகமோ தனத்தை வர்ஷிக்கின்றது. லோகத்திலுள்ள மேகத்திற்கு கீழ்காற்று ஸஹாயமாக ஆகும். அம்பிகையினுடைய நயனமாகிற மேகத்திற்கோ, அபாரமான கருணையே ஸகாவாக ஆகும். இவ்விதம் மஹிமை தங்கிய கருணையை அனுகூலமாக உடைய அம்பிகையின் நயன

மாகிய மேகமானது மழையை எதிர்பார்க்கும் சாதக பக்ஷி போல், தனப்பெருக்கை எதிர்பார்க்கும் தரித்ரனுன என் விஷயத்தில், தாரித்ரியத்தைப் போக்கடித்து பரிபூர்ண மான தனத்தையும் கொடுத்து பரம பாமரனுன என்னை ரக்ஷிக்கவேண்டும் என்று அர்த்தத்தை அனுஸந்தானம் செய்துகொண்டு மேற்சொன்ன ச்லோகத்தை பாராயணம் செய்யவேண்டும். அவ்விதம் செய்தால் ப்ராணிகளுக்கு தாரித்ரியமே தொலைந்து அஷ்டைச்வர்யங்களும் உண்டா கும் என்பதில் சந்தேகமே யில்லை.

---

इष्टाविशिष्टमतयोऽपि यया दयार्द्र
दृष्ट्या त्रिविष्टपपदं सुलभं लभन्ते।
दृष्टिः प्रहृष्टकमलोदरदीप्तिरिष्टां
पुष्टिं कृषीष्ट मम पुष्करविष्टरायाः ॥ ९ ॥

இஷ்டா விசிஷ்ட மதயோபி யயா தயார்த்ர
த்ருஷ்ட்யா த்ரிவிஷ்டபபதம் ஸுலபம் லபந்தே
த்ருஷ்டி: ப்ரஹ்ருஷ்ட கமலோதரதீப்திரிஷ்டாம்
புஷ்டிம் க்ருஷீஷ்ட மம புஷ்கர விஷ்டராயா:

*பதவுரை :*

**इष्टौ अविशिष्टमतयोपि** - *இஷ்டௌ அவிசிஷ்டமத யோபி* = ஸ்வர்க ஸாதனமான யாகம் செய்வதில் திருப்தி யில்லாத மனதோடு கூடினவர்களும் (அதாவது ஸ்வர்கத் திற்கு அநர்ஹாளான மஹா பாபிகளும்கூட) **यया** - *யயா* = எந்த **दयार्द्र दृष्ट्या** - *தயார்த்ர த்ருஷ்ட்யா* = லக்ஷ்மீ தேவியினுடைய கருணை நிறைந்த த்ருஷ்டியினலே

